# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விளம்பி - மார்கழி - 2018 - டிசம்பர்



காட்சி ஊடகத்துறை சார்பில் பள்ளி மாணவர்களுக்கு நடத்தப்பெற்ற நிகழ்ச்சி
உடன் பேராசிரியர் பாண்டியராஜன்

78

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விளம்பி – மார்கழி – 2018 – டிசம்பர் இதழ் – 78

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

**பொருளடக்கம்**



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

ஏறூர்ந்தான் காதலியே இமயரசன் திருமகளே
இனியமறைக் கருப்பொருளே! ஆல வாயில்
இருப்பவளே! சொக்கனுக்கு வலத்தே நின்ற
இளங்குயிலே! செந்தமிழ்நற் பாண்டி நாடு
மாறாதே ஆள்கின்ற மாதரசி தென்பொதிய
மலைத்தென்றல் கொண்டுவரும் மணத்தை ஏற்று
மகிழ்கின்ற மங்கையே! ஆழி தாங்கும்
மாலுக்குத் தங்கையே! சுடலை சாம்பல்
ஏறிடவே காடாடும் ஈசன்மகிழ் பெண்பாவாய்
ஏதங்கள் தனைப்போக்கி எம்மை ஆளும்
ஏந்திழையே! வன்னிவனம் இருக்கும் தாயே!
எழிற்கொற்ற வாளீசன் வலத்தே நின்றாய்
ஆறதனைத் தாங்குமுடி ஆண்டவர்க்கு மனையாட்டி
அம்புயத்தாள் பரமேட்டி ஆனாய் நீயே
அருள்தருமோர் கொற்றவையே நெல்லை என்னும்
ஆரணங்கே உன்பெருமை சொல்லப் போமோ

(காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்)

## ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

நாம் சிறுவனாக இருந்த காலத்தில் எனக்கும் என்னுடைய தம்பி தங்கச்சிக்கும் புதுமை என்ற பிறந்தநாள் போன்ற சிறு விசேஷத்தை எங்களுடைய அய்யா அப்பத்தா நடத்தினார்கள். இரண்டாம் உலகப்போர் முடிந்து இந்தியா சுதந்திரம் அடைந்த அந்தக் காலத்தில் (1950 - 1955 காலம்) அனைத்துப் பொருட்கள், உணவுப் பொருட்கள் அனைத்திற்கும் தட்டுப்பாடு மிக அதிகமாக இருந்தது. யாவற்றிற்கும் ரேஷன் என்கின்ற சட்டமிருந்தது. சிறு விசேஷங்களுக்குக் கூட விருந்தினர்களுக்கு உணவளிப்பதற்கு தாசில்தாரிடம் அனுமதி பெற்றே உணவுப் பொருள்கள் வாங்க வேண்டிய கட்டாயமான சூழ்நிலை இருந்தது.

அப்படிப்பட்ட காலங்களிலும் கூட எங்களை எங்கள் அத்தையின் கணவர் அவர்களுக்கு வயல்கள் இருந்த திருவையாறுக்கு அருகில் உள்ள கிராமங்களுக்குக் கூட்டிச் செல்வார்கள். அந்தக் கடுமையான உணவுப் பொருட்கள் பற்றாக்குறை பஞ்சத்திலும் கூட அந்தக் கிராமத்து விவசாயிகள் எங்களை எல்லாம் விருந்தினரைப் போல் கருதி உபசரிப்பார்கள். நில உரிமையாளருக்குக் கொடுக்க வேண்டிய குத்தகைத் தொகையையும் ஒழுங்காகக் கொடுத்து வந்தார்கள். இரண்டாவது உலகப் போரின் காரணமாகவும் இந்தியா சுதந்திரம் அடைந்து வெள்ளையர்கள் அனைத்துப் பொக்கிஷங்களையும் எடுத்துச் சென்றுவிட நாடே பஞ்சத்தில் ஆழ்ந்து கிடந்தது. அப்படிப்பட்ட சூழ்நிலையிலும் அன்றைய விவசாயிகள் உழைப்பை நம்பி விளைச்சலை உண்டாக்கினார்கள். உழைத்து விளைவித்துத் தாங்கள் செய்ய வேண்டிய கடமைகள் அனைத்தையும் முறைப்படி செய்து வந்தார்கள்.

ஆனால் இன்றைய விவசாயிகள் உழைப்பை நம்பாதவர்களாக நிவாரணத்தை நம்புபவர்களாக மாறி இருப்பது வருந்தத் தக்கதாக இருக்கிறது. விவசாயத் தொழிலே நலிந்து கொண்டு வருகிறது.

இதற்கெல்லாம் காரணம் இயற்கையின் சீற்றங்களை, மாறுதல்களைக் காரணம் காட்டி நிவாரணம் பெற வேண்டும் என்ற தவறான மனநிலையை விவசாயிகள் உருவாக்கிக் கொண்டுள்ளனர். இந்தத் தவறான மனநிலை கடந்த 40,50 ஆண்டுகளாகத் தான் உருவாகி உரமாகி நிற்கிறது. இந்த நிவாரணம், இலவசப் பொருட்கள் வழங்குவது ஆகியவற்றால் தமிழக மக்களுடைய மனநிலை வெகுவாகப் பாதிக்கப்பட்டுள்ளது. இயற்கை மாற்றத்தால் பாதிக்கப்பட்டவர்களும் பாதிக்கப்படாதவர்களும் நிவாரணத் தொகைக்கு முயல்வதும் அரசாங்க அதிகாரிகளுக்குக் கையூட்டுக் கொடுத்துப் பெறுவது என்கின்ற மனநிலை நடைமுறை சாதாரணமாகிவிட்டது.

உண்மையாகவே சுனாமி, புயல் போன்ற இயற்கைச் சீற்றங்களால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவுகின்ற நல்லெண்ணம் படைத்த பிறமக்களுக்கு இம்மனநிலை இடையூறாக இருக்கிறது. பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவுவதற்காகக் கொண்டு செல்கின்ற நிவாரணப் பொருட்களை வழிமறித்து ஓரிரு கிராமத்தார்களே பிடுங்கிக் கொள்வது மிகவும் வருந்தத்தக்கதாகவும் கண்டிக்கத்தக்கதாகவும் உள்ளது. இந்தச் செயல்களை நாம் சுனாமிப் பாதிப்பிற்கு நிவாரணம் அளித்த காலத்தும் தற்போது கஜா புயல் பாதிப்பிற்கு நிவாரணம் அளித்த காலத்தும் நேரில் சந்தித்தோம்.

சுனாமிக் காலத்தில் நாம் ஏறக்குறை 4 லட்ச ரூபாய் மதிப்புள்ள பொருட்களை நிவாரணமாக அளித்தோம். அதிஷ்டவசமாகவும் இறைவன் அருளாலும் அப்போதைய நாகப்பட்டினம் கலெக்டர். ஜெ. ராதாகிருஷ்ணன் அவர்களைச் சந்தித்து ஆலோசனை கேட்டதால் அவருடைய மேற்பார்வையிலே ஒரு கிராமத்தில் நிவாரணப் பொருட்களைப் பாதிக்கப்பட்ட மக்களுக்கு நேரடியாகக் கொடுக்க முடிந்தது. மற்றவர்கள் அளித்த நிவாரணங்கள் பாதிக்கப்பட்டவர்களுக்குச் சென்று சேரவில்லை என்பது அந்த நிவாரணப் பொருட்களைப் பெறுவதும் அதனை விற்பதுமாக ஒரு கூட்டமே தொழிலாகக் கொண்டிருப்பதைக் கண்கூடாகப் பார்த்தோம்.

இப்போதும் கஜா புயலால் பாதிக்கப்பட்ட பகுதிகளுக்கு நாம் சென்று பார்த்த பொழுது நம்முடைய காரை மறித்தார்கள். இதில் வேடிக்கை என்னவென்றால் 10 வயது சிறுவன் யோ காரை நிறுத்துயா என்று கத்திக்கொண்டு குறுக்கே ஓடிவந்ததும் நடந்தது. நாம் நிவாரணப் பொருட்களைக் கொண்டு செல்லவில்லை என்பதை, காரைத் திறந்து காட்டி அதன் பின்னரே செல்ல முடிந்தது. இப்படி ஏறக்குறைய ஒரு மாதம் வேறு எந்த வேலையும் செய்யாமல் ஒரு தெருவிற்கு ஓர் இடத்தில் சமைத்துப் பகிர்ந்து கொண்டதும் ஆன கொடுமையைக் கண்ணால் பார்த்தோம். இடிந்து விழுந்த வீடுகளை, வேரோடு விழுந்த மரங்களை அகற்றுவதற்கு ஆள் இல்லாமல் பல நாட்கள் அப்படியே காட்சிப் பொருள்களாகக் கிடந்தன. வீட்டிற்கும் மரத்திற்கும் உரியவர்கள் கூட நிவாரணப் பொருட்களைச் சேகரிப்பதிலே தான் கவனம் செலுத்தினார்கள். இப்படி சந்தர்ப்பங்களைத் தவறாக பயன்படுத்திக் கொள்வதனால் தான் மக்கள் பேரில் நம்பிக்கை குறைகிறது. நாம் நம் திருக்களர் ஆண்டவர் திருமடத்தைச் சார்ந்தவர்களுக்கு மட்டும் பொருள்கள் சிறுதொகை நிவாரணமாக அளித்தோம்.

இயற்கைப் பாதிப்பையும் ஒரு லாபமாகக் கருதுவது வேடிக்கையாக இருக்கிறது. சிலர் பொருள் சேர்க்கவும், உண்மையிலே பாதிக்கப்பட்டவர்கள் செயல்களைச் செய்யாமல் தர்ம உணர்வுகளுக்கு மரியாதையும் ஊக்கமும் அளித்துப் பகிர்ந்து உண்ணும் பழக்கமும் ஈந்து உவக்கும் பழக்கமும் மேம்படுத்துவது தமிழகத்தின் வளர்ச்சிக்கு வழிவகுக்கும். இலவசத்தை எதிர்நோக்கிக் காத்திருந்து சோம்பேறிகளாவது நாட்டின் தளர்ச்சிக்கு வழிவகுக்கும். சிந்தித்துச் செயல்படுவீர்களாக.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை.*



## அதிமதுர கவிகள் *(தொடர்ச்சி)*

காப்பியக்கவிஞர் நா. மீனவன்

**வித்தாரச் செய்யுட்கள்**

யாப்பு அமைதியுடன் திறமை தோன்றப் பாடுதலே வித்தாரக் கவியாகும். இப்படிப் பாடுவதில் மிக்க திறமை வாய்ந்தவர் என்பதை அவர்தம் பாடல்கள் மூலம் காணலாம்.

**ககரவர்க்கச் செய்யுள்**

முழுவதும் ககர வர்க்கமே அமையப் பாடுதல் ககரவர்க்கச் செய்யுள்

காக்கைக்கா காகூகை கூகைக்காகா காகாக்கை
கோக்குக்கூ காக்கைக்கு கொக்கொக்க கைக்கைக்குக்
காக்கைக்கு கைக்கைக்கா கா.

**பொருள் :** கூகையை இரவில் காக்கை வெல்ல இயலாது. கூகை பகலில் காக்கையை வெல்ல இயலாது. அரசனுக்கு அவன்நாட்டைப் பகைவரிடம் இருந்து காப்பதற்குக் கொக்கைப் போலத் தகுதியான சமயம் வரும்வரை காத்திருக்க வேண்டும். பகையை எதிர்த்துக் காப்பதற்குக் காலமில்லாக் காலமாயின் தலைவனுக்கு இயலாத ஒன்றாகிவிடும்.

**தகர வர்க்கச் செய்யுள்**

முழுவதும் தகர வர்க்கமே அமையப் பாடுதல் தகர வர்க்கச் செய்யுள்

தத்தித்தா தாதுதி தாதூதித் தத்துதி
துத்தித் துதைதி துதைதத்தா தூதுதி
தித்தித்த தித்தித்த தாதெது தித்தித்த
தெத்தாதோ தித்தித்த தாது?

**பொருள் :** வண்டே! தாவிச்சென்று பூந்தாதினை ஊதி உண்கின்றாய். பூந்தாதினை ஊதியபின் மறுபடியும் தாவி எங்கோ செல்கின்றாய். துத்தி என ரீங்கார ஒலி எழுப்பியவாறு மற்றொரு பூவினை நெருங்குகின்றாய். அப்பூவினை நெருங்கி அதன் பூந்தாதினை உண்கின்றாய். உனக்கு இனிப்பாய் இருக்கின்ற தாது எதுவோ? தித்தித்தது எந்தப் பூவின் மகரந்தமோ, இதழால் அழகியது எந்தப் பூவோ?

**தாதி தூதோ தீது**

தாதிதூ தோதீது தத்தைத்தூ தோதாது
தாதிதூ தொத்தித்த தூததே – தாதொத்த

துத்திதத் தாதே துதித்துத்தே தொத்தீது
தித்தித்த தோதித்த திதி.

**பொருள் :** தோழியர் சென்று உரைக்கும் தூதோ பயன்படாது. கிளியோ சென்று தூது சொல்ல மாட்டாது. தோழியின் நாள் கடந்து போகும். தெய்வத்தை வழிபட்டுத் தொடர்தலும் பயனற்றதாகும். அதனால் பூந்தாதினைப் போன்ற தேமல்கள் என்மேற் படர்ந்து மிகாது. எனக்கு இனிமையான காதலனின் பெயரை நான் ஓதிக் கொண்டிருப்பேன்.

**வல்லினப் பாட்டு**

முழுமையும் வல்லின எழுத்துக்கள் அமையப் பாடுவது வல்லினப் பாட்டு.

துடித்துத் தடித்துத் துடுப்பெடுத்த கோடற்
றொடுத்த தொடைகடுக்கை பொன்போற் - பொடித்துத்
தொடைபடுத்த தோடுத்த தோகைகூத் தாடக்
கடிபடைத்துக் காட்டித்துக் காடு.

**பொருள் :** காந்தள் முகிழ்த்தனவாய் ஒளி கொண்டனவாய் அரும்புகளை எடுத்தன. கொன்றைகள் பொன்போல் ஒளிரும் மாலைகளைத் தொங்கவிட்டன. வளைகளை அணிந்த தோள்கள் சிலிர்த்துத் துடிப்பவை ஆயின. மயிலினம் கூத்து ஆடத் தொடங்கின. இப்படியாகக் காடே தனக்கொரு மணத்தைப் படைத்துக் கொண்டவையாகத் தன்னைக் காட்டிற்று.

**மெல்லினப் பாட்டு**

முழுவதும் மெல்லின எழுத்துக்கள் அமையுமாறு பாடுக என்று ஒரு கவிஞர் கேட்க அவ்வாறே பாடியது.

மானமே நண்ணா மனமென் மனமென்னும்
மாமனமான் மன்னா நனிநாணும் - மீனமா
மானாமினன்மின்னி முன்முன்னே நண்ணும்
மானா அணிமேனி மான்.

**பொருள் :** மானம் உடைய தன்மையை விரும்பாத மனத்தின் இயல்புதான் என்னே? ஒப்பிலாத செம்மணி போன்ற திருமேனி உடையவளான மான் போன்ற ஒரு நங்கை தன் அணிகலன்களால் நீங்காத ஒளியினைப் பரப்பிக் கொண்டு முன்னே வந்தாலும் என் மனமென்னும் பெரிய யானை மிகவும் வெட்கப்படும். அவை தாழ்ந்து இழிவுற்று நிற்கும்.

**இடையினப் பாட்டு**

**யரல வழள** என்பவை இடையின எழுத்துக்கள்... இவற்றை வைத்து ஒரு செய்யுள் பாடும் என்று ஒரு புலவர் சொல்ல அவ்வாறே பாடியது. காதலனைப் பிரிந்த ஒருபெண் பிரிவாற்றாமையால் ஆற்றாது புலம்பியதான கருத்துடைய பாடல் இது.

விரவலராய் வாழ்வாரை வெல்வா யொழிவா
யிரவுலவா வேலை ஒலியே – வரவொழிவா
யாயர்வாய் யேயரிவை யாருயிரை யீராவோ
யாயர்வாய் வேயா வழல்.

**பொருள் :** கடலின் பேரொலியே! தம் நாயகரேடு கலந்து இராதவராய் வாழ்கின்ற பெண்களைப் பொருது வெற்றி கொள்வாய் அந்தச் செயலை இனி நீ கைவிடு.. இரவுப் பொழுதில் அலைகளாய் நீ எழுந்து உலாவுதல் செய்யாதே. நின் வரவினையும் காதலரையும் கைவிடுக. ஆயர்களின் வாய் ஒன்றே என் போன்ற பெண்களின் ஆருயிரைப் பிளந்து அழிக்கப் போகின்றதோ. அந்த ஆயர்களின் வாயிலுள்ள குழல் அழல்போல் எம்மை எரிக்கின்றதே.

**ஒன்று முதல் பதினெட்டு**

ஒன்று முதல் பதினெட்டு வரையுள்ள எண்களை அடைச்சொல் இன்றி ஒரு வெண்பாப் பாடுக! என்றார் ஒரு புலவர். காளமேகம் உடனே பாடிய வெண்பா இது.

ஒன்றிரண்டு மூன்றுநான்கு ஐந்தாறு ஏழெட்டு
ஒன்பதுபத் துப்பதி னொன்று – பன்னி
ரண்டுபதின் மூன்றுபதி னான்குபதி னைந்துபதி
னாறுபதி னேழ்பதி னெட்டு

**பொருள் :** இதில் ஒன்று முதல் பதினெட்டு வரையிலான எண்கள் வெண்பாவில் அடக்கிய வித்தகம் காணலாம்.

**பன்னிருராசிகள்**

பன்னிருராசிகளை வரிசைப் படுத்தி எவ்வித அடைமொழியும் இன்றி ஒரு வெண்பாச் சொல்லும் என்றார் ஒரு புலவர்.

பகருங்கால் மேடம் இடபம்மிது னம்கர்க்க
டகம்சிங் கம்கன்னி துலாம்விர்ச் – சிகம்த
நுசுமகரம் கும்பம் மீனம்பன் னிரண்டும்
வசையறும்இ ராசி வளம்

**பொருள் :** மேடம் முதல் மீனம்வரையிலான பன்னிரு ராசிகளும்

எவ்வித அடைமொழியும் இன்றிப் பாடிய விதம் காண்க.

**தை மாசி பங்குனி மாதம்**

எவ்விதமான சமிசை கொடுத்தாலும் காளமேகம் உடனே பாடிய திறமை கண்டு அவரை எவ்விதமேனும் மடக்க எண்ணிய ஒரு புலவர் தை மாசி பங்குனி மாதம் என்று வரும் மாதப்பெயர்கள் வருமாறு ஒரு வெண்பாவைப் பாடுக! என்று கேட்டதும் காளமேகம் உடனே பாடிய வெண்பா இது.

இவைகள் மாதப் பெயராயும் அவை வேறு பொருள் தருமாறு சுவைபடப் பாடிய வெண்பா

பாணர்க்குச் சொல்லுவதும் பைம்புனலை மூடுவதும்
தானு உரித்ததுவும் சக்கரத்தோன் - ஊணதுவும்
எம்மானை ஏத்துவதும் ஈசனிடத் தும்சிரத்தும்
தைமாசி பங்குனிமா தம்.

பொருள் : தையற்காரர்க்குச் சொல்லுவது தை என்பதாகும். மிகுதியான நீரினை மூடிக் கொண்டிருப்பது மாசு (பாசி) சிவபெருமான் உரித்தது யானையை (இபம்) சக்கரத்தைக் கையில் ஏந்திய திருமால் கிருஷ்ணாவதாரத்தில் உண்டது மண் ஈசனின் இடப்பாகத்தில் இருப்பது உமை. தை - மாசு - இபம் - கு - உனி மாது - அம் என்று பிரித்துப் பொருள் கொள்ள வேண்டும்.

**ஆறு சாதிகள்**

ஆறு சாதிகளை ஒரே பாட்டில் அமைத்துப் பாடும் பார்க்கலாம் என்று ஒரு புலவர் கேட்கக் காளமேகம் பாடிய பாடல் இது. ஒரு பெண்ணை நோக்கிப் பாடுவதாக அமைந்தது.

கம்மாளன் அங்கிக் கண்என வேதுத்தார்
செம்மான் சதுரரைத் திருஅரசை - அம்மாகேள்
வாணியனும் பொன்னேரி வாழும்வெள் ளானுமே
சேணியனும் அன்றே தெரிந்து.

பொருள் : அம்மையே கேட்பாயாக. வாணியாகிய கலைமகளைக் கொண்டோனும் அழகிய திருமகளைத் தன் மார்பிலே ஏற்றவனாகிய பாற்கடலில் பள்ளி கொண்ட திருமாலும் இந்திரனும் அந்நாளில் உண்மையை அறிந்து கொண்டு சிவந்த மாலையினை அணிந்த திறமை வாய்ந்த சிவபெருமானும் அழகிய நடத்தரசை கபாலத்தை ஏந்தியவன் ஆகிய நெருப்புக் கண்ணால் சிரித்துப் புரம் எரித்தவன் என்று வாழ்த்தினார்கள்.

**நடுவெழுத்து அரங்காரம்**

திருமால்வா கனம்நாவாய் இராசி ஒன்று
சினைதெவிட்டார் மாதுலன்கோ கிலம்இவ் ஏழில்
உருவாமே ஏழ்எழுத்தின்நடு எக்குச் செய்தான்
உகந்துபதி னான்கினையும் தானே கொண்டான்
ஒருபாகத்(து) இருத்தினான் கையில் ஏற்றான்
ஒருமதலை தனக்(கு) அளித்தான் உண்டான் பூண்டான்
பரிவாய்ஒண் கரத்(து) அமைத்தான் உகந்தான் இந்தப்
பைம்பொழில்தில் லைஉள்ஆடும் பரமன் தானே.

**பொருள் :** திருமால் வாகனம் கருடன். இதனை நாகாரி என்றும் அழைப்பர். நாவாய் என்றும் சொல்வர். இராசி ஒன்று கன்னி. அதாவது கன்னியாகிய உமையைப் பாகத்தில் இருக்க வைத்தான். (நாகாரி என்பதில் நடுவெழுத்தாகிய காவை நீக்கினால் நாரி என்று வரும்) நாவாய் அதாவது மரக்கலம் (இதில் முதல் மூன்றெழுத்தாகிய மரக் என்பதை நீக்கி ஐந்தாம் எழுத்தாகிய ல என்பதை நீக்கினால் கம் என்ற சொல் வரும். கம் என்பது மண்டையோட்டைக் குறிக்கும் சொல். அதனைக் கபாலம் என்றும் சொல்வர் அதனைக் கையில் ஏந்தினான். கனியைக் கணபதிக்கு அளித்தான். நஞ்சை உண்டான். ஆத்தி மாலையைப் பூண்டான். மானைக் கரத்தில் ஏந்தினான். பிச்சை ஏற்றான். என்னிடம் காலன் வராமல் காத்தான். இத்தனையும் செய்தவன் சோலைகள் சூழ்ந்த தில்லையுள் ஆடும் பரமனே)

**நிரல் நிறைப் பொருள்கோள் (சிவன்)**

ஒரு வரிசை முறையில் பாடலை அமைத்துப் பின்னர் வரிசை முறைப்படி பொருள்பட முடிப்பது நிரல் நிறைப்பொருள்கோள்.

கூற்றுவனை வில்மதனை அரக்கர் கோவை
கூன்நிலவைக் குஞ்சரத்தை இஞ்சி மூன்றை
ஏற்(று)உல(கு)இன் புறஉருவும்மாளத் தோள்கள்
இறஎறிப்ப இமயப்பெண் வெருவ வேவக்
கால்தொழிலால் நயனத்தால் விரலால் கற்றைக்
கதிர்முடியால் கரதலத்தால் கணையால் பின்னும்
ஊற்றழிய உதைத்(து) எரித்தான் அவன்என்னை உடைய கோவே..

**பொருள் :** எதிரில் வந்த கூற்றுவனை உலகு இன்புறும்படியாகக் காலால் உதைத்தவன் (மார்க்கண்டேயனுக்காக) கையில் கரும்பு வில் உடைய மன்மதனை நெற்றிக் கண்ணால் எரித்தவனும் அரக்கர் கோனான இராவணனின் தோள்கள் நெரியுமாறு விரல்களால்

அழுத்தியவனும் ஒளியுடைய பிறைமதியை முடியில் சூடியவனும் இமவான் மகள் அஞ்சுமாறு வந்த யானையின் தோலை உரித்தவனும் திரிபுரங்களை எரித்தவனும் என்னை அடிமை கொண்ட சிவபெருமானே.

**நிரல் நிறைப் பொருள்கோள் (திருமால்)**

பொன்னனைவாள் அரக்கனைநூற் றுவரைக் காவைப்
பொருசிவனைக் கனைகடலைப் பொன்னன் ஈன்ற
நன்மகற்காய்ச் சுரர்க்காய்ஐ வருக்காய்க் காதல்
நட்பினுக்காய்ச் சானகிக்காய்க் நடவைக் காக
மன்உகிரால் வடிக்கணையால் வளையால் புள்ளால்
வயங்குதோள் வலியால்வா னரங்களாலும்
முன்உடல்கீ றிச்சிரங்கொண்(டு) அமரில் வீழ்த்தி
முதலொடும்கொண்(டு) இறுத்(து)அடைத்த மோகூரானே

**பொருள் :** பொன்னன் என்று இரணியனைக் குறிப்பர். அவனுடைய மைந்தன் பிரகலாதன்... அவன் பொருட்டாய் முன்னாளில் இரணியனின் உடலைக் கீறிக் கொன்றவன். தேவர்களின் பொருட்டு வாளாற்றல் மிக்க இராவணன் என்ற அரக்கனின் தலையைக் கூரிய கொம்பினாலே கொய்தவன். பாண்டவர்கள் ஐவருக்காகக் கௌரவர்கள் நூற்றுவரைத் தன்சங்க நாதத்தாலே போரில் கொன்று அழித்தவன். தன் காதல் நாயகியாம் நப்பின்னைப் பிராட்டியின் அன்புக்காகக் கருடன் மூலமாகப் பாரிசாத மலர்ச்சோலையை வேருடன் கொய்தவன். போருக்குரிய வில்லைச் சானகிக்காய்த் தன் தோள் ஆற்றலால் வளைத்து ஒடித்தவன். இலங்கை செல்ல ஒலிக்கும் கடலைக் கடந்திட வானரங்களைக் கொண்டு அடைத்தவன் திருமோகூரில் வீற்றிருக்கும் திருமாலே.

**மாடும் – பறையும்**

செய்யுள் வகையில் கடைமொழி மாற்று என்பது ஒருவகை. செய்யுளின் இறுதிச் சொல்லை முதற்சொல்லோடு இணைத்துப் பொருள் கொள்ள வேண்டும். அவ்வாறு அமைய ஒரு பாடல் பாடுக! என்று கேட்கக் காளமேகம் பாடிய பாடல் இது.

மாடுதின்பான் பார்ப்பான் மறைஓது வான்குயவன்
சூடிமிக மண்பிசைவான் கொல்லனே – தேடி
பரும்புடவை தப்பும் பறை...

**பொருள் :** பறை மாடு தின்பான். பார்ப்பான் மறை ஓதுவான். குயவன் மண் பிசைவான். கொல்லன் இரும்பு அடிப்பான். செக்கான் எண்ணெய் விற்பான். வண்ணான் பெரிய புடவையை வெளுப்பான் என்று பொருள் கொள்ள வேண்டும்.

**ஆயனுக்கு மண்**

ஆயனுக்குக் கண்மூன்றாம் ஆதிசிவ னுக்(கு)இருகண்
மாயனுக்குச் செங்கையிலே மான்மழுவாம் – நேயமுடன்
சங்கரற்குச் சங்(கு)ஆழி தான்மாலுக்(கு) ஆலமாம்
மங்கைஇடத் தாற்(கு)ஆகும் மண்

**பொருள் :** இதுவும் கடைமொழி மாற்றாக அமைந்த பாடலே. ஆதி சிவனுக்கு மூன்றுகண் கோபாலன் ஆன திருமாலுக்கு விருப்பமானது சங்கும் சக்கரமும். மங்கையை இடப்பாகத்தே கொண்ட சிவனுக்கு ஆலம். அதாவது நஞ்சு. இமாயன் உண்டது மண்.

**கொன்றை – சிவன்**

கொன்றை மலர்தரித்தான் கோபாலன் கோல்எடுத்து
நின்றுகுழல் ஊதினான் நீள்சடையோன் – பொன்திகழும்
அக்(கு)அணிந்தான் மாயன் அர(வு)அணையில் கண்வளர்ந்தான்
சிக்கலிலே வாழும் சிவன்.

**விளக்கம் :** இச்செய்யுளைப் பொருள் கொள்ளும்போது இறுதி அடியான சிக்கலிலே வாழும் சிவன் என்ற அடியை முதலில் வைத்துப் பொருள் கொள்ள வேண்டும்.

சிக்கலில் கோயில் கொண்டுள்ள சிவபெருமான் கொன்றை மாலையை அணிந்தவன். மாயனாகிய கோபாலன் மாடு மேய்க்கச் செல்லும்போது கோல் எடுத்ததோடு குழல் எடுத்து ஊதினான். அழகிய நீண்ட சடையினை உடைய சிவபெருமான் எலும்பினை மாலையாக அணிந்தான். மாயனோ பாம்பாகிய படுக்கையில் கண் வளர்ந்தான்.

**கடம்பற்குக் கை**

கடம்பற்(கு)எண் தோள்அயற்குக் கண்பதினைந் தாமால்
கடம்பற்கே நால்வாய்கை ஐந்தே – கடம்பற்கோ(டு)
ஆனைமுகற்கு ஆயிரம்கண் அகண்ட லற்(கு)இலம்பா(டு)
ஆன்ஐமுகற்கு ஆ(று)இரண்டு கை.

**பொருள் :** இதுவும் கடைமொழி மாற்று வகையைச் சேர்ந்ததே. செய்யுளின் இறுதியில் வரும் இரண்டு சீர்களை மட்டும் வைத்துப் பொருள் கொள்ள வேண்டும்.

கடப்பமாலை தரித்த முருகப்பெருமானுக்குப் பன்னிரண்டு கைகள். நான் முகனுக்கு எட்டுத் தோள்கள். கடம்பவனமாகிய மதுரையில் வீற்றிருக்கும் சிவ பெருமானுக்குப் பதினைந்து கண்கள் (சிவனுக்கு ஐந்து முகங்கள் சிவன் மூன்று கண்களை உடையவன். எனவே ஐந்தையும் மூன்றையும் பெருக்கினால் பதினைந்து) நீண்டு தொங்கும் துதிக்கையை உடைய கணபதிக்கு ஐந்து கைகளும் மதமும் பல்லாகிய கோடும் உள்ளன. இந்திரனுக்கோ ஆயிரம் கண்கள்.

**சிதம்பரத்துச் சின்னங்கள் :**

ஞான சபைக னகசபைசிற் றம்பலம்பே
ரானந்தக் கூடம் திருமூலட் - டானம்பே
ரம்பலம் சாவரண நாற்கோபுரம் பொற்செய்
கம்பண்ட பஞ்சிவங் கை.

**பொருள் :** சிதம்பரம் கூத்தப்பெருமான் ஆலயத்தில் இருக்கும் சின்னங்களைத் தொகுத்து ஒரு வெண்பாவாய்ப் பாடியது. சிற்சபை என்பது ஞானசபை. கனக சபை என்பது பொன்னம்பலம். இது கூத்தப்பெருமான் வீற்றிருக்கும் இடம். சிற்றம்பலம் என்பது சிற்சபையான ஞானசபைக்கு முன் இருப்பது. இது சிவபெருமான் ஊர்த்துவதாண்டவ மூர்த்தியாக விளங்கும் இடம். திரு மூலட்டானம் என்பது தேவசபை. தேவர்கள் வந்து பெருமானை வணங்கிப் போற்றும் இடம். ஐந்து சுற்றுகள் பஞ்சவர்ணம் எனப்படும். கம்பமண்டபம் ஆயிரக்கால் மண்டபம் சிவகங்கை திருக்குளத் தீர்த்தம் ஆகியன உள்ளன.

**திருவாரூர்ச் சின்னங்கள்**

சங்குதீர்த் தம்திச் சாளரவா யில்வீர
சிங்காச னம்திருவந் திக்காப்புப் - பங்குனிமா
தம்திருநாள் தீர்த்தம் திருவின்நா தன்கோயில்
உத்திரபா கம்திருவா ரூர்.

**விளக்கம் :** சங்கு தீர்த்தம் திருச்சாளர வாயில் வீர சிங்காசன் திருவந்திக் காப்பு பங்குனி மாதத் திருநாள். திருவின் தீர்த்தம் உத்தர பாகம் நாதக் கோவில் இவையே திருவாரூர்ச் சின்னங்கள்.

திருச்சாளர வாயில் - தியாகேசர் முன்னிருக்கும் பலகணி வாயில். வீர சிங்காசனம் என்பது தியாகேசர் வீற்றிருப்பது. திருவந்திக் காப்பு என்பது அரையில் சாத்தும் காப்பு வடிவம். பங்குனி மாதத் திருநாள் திருவுத்திரத்திருநாள் திருவின் தீர்த்தம் கமலாலயம் என்னும் திருக்குளத் தீர்த்தம்.

**கும்பகோணத்துச் சின்னங்கள்**

திருக்குடந் தைஆ திகும்பேசர் செந்தா
மரைக்குளம் கங்கை மகம்கா - விரிக்கரையின்
ஓரம்கீழ்க் கோட்டம்கா ரோணம்மங்கை நாயகியார்
சாரங்க பாணி தலம்.

**விளக்கம் :** திருக்குடந்தையில் உள்ள ஆதி கும்பேசர் ஆலயம்.. செந்தாமரைக் குளம். கங்கை முதலான நதிகள் வந்து கூடும் மகாமகக் குளம். காவிரிக் கரை ஓரம் உள்ள கீழ்க்கோட்டம். திருக்குடந்தைக் காரோணம் என்ற தலம். மங்கை நாச்சியார் திருக்கோயில் சாரங்கபாணி திருக்கோயில் ஆகியன கும்பகோணத்துச் சின்னங்கள்.

## பட்டினத்தார் பைந்தமிழ் - 21

தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

தென்னாட்டுத் துறவரசராகிய பட்டினத்தார் பதினோராம் திருமுறைக்கு மேலாகப் பாடியுள்ள பாடல் களைப் பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடற்றிரட்டு என்ற பெயரில் நான்கு நூல்கள் உள்ளன. அவை தில்லையைப் பற்றியதாக இரண்டாய் காஞ்சிபுரம் பற்றியதாக இரண்டாய் அமைந்தவையாகும். இவற்றுள் சைவர்களுக்குக் கோவில் என்றாலே சிதம்பரத்தைக் குறிப்பதால் பாடற்றிரட்டின் முதல் பனுவலாகிய கோயிற் திருஅகவலில் நெஞ்சே! தியானம் செய்வாயாக எனத் தொடங்கியவர், அந்நெஞ்சம் ஒரு நிலைப்படாமல் அங்கும் இங்கும் ஓடும் என்பதால் அதனைக் கட்டுப்படுத்தித் தன்னைத் தானே உணர், என்கிறார் இரண்டாவது பாடலில்! அங்ஙனம் உணர்ந்தால் ஆன்மா குடிகொண்டிருக்கும் இவ்வுடலின் அழுக்கை உணர்ந்து உய்ய முடியும் என வழிகாட்டுகிறார்.

உடல் அழிவுக்குரியது என்ற கருத்தையே பட்டினத்தார் பல உவமைகள் வாயிலாகக் கூறுவது புதுமையாக உள்ளது. இதுபோல் எவரும் கூறாததாகவே உள்ளன.

1. மெய் வாய் கண், மூக்கு, செவி என்னும் ஐம் பொறித் திருடர்கள் தம் விருப்பத்திற்குக் கலகம் செய்து சீரழிப்பதற்குரிய காடாக இருப்பது இந்த உடல்,

2. சலமும் மலமும் நிரம்பியுள்ளதொரு பெட்டகம்
3. நல்வினை தீவினைகள் குடிகொண்டுள்ள பொய்மாய வீடு
4. வாதாபித்த சிலேத்துமமாகும் நோய்கள் உலாவரும் ஒரு சிற்றூர்
5. அழுக்கு மலிந்த தோல் போர்த்திய இரத்தம் (குருதி) ஊறும் ஒரு கருவி
6. தீ நாற்றம் கொண்டதொரு பாண்டம் (பானை)
7. தலை முதல் கால் வரையான ஒன்பது ஓட்டைகளை முற்றிலுமாக அடைக்க முடியாத நான்கு முழு அளவான கிழிசல் துணி
8. எந்தப் பயன்பாட்டிற்கும் உரியதல்லாத பேய்ச் சுரைக்காய் மண்டிப் படர்ந்துள்ள தோட்டம்.
9. ஆசைக் கயிற்றால் ஆடும் பம்பரம்.
10. நோய்களுக்கான இருப்பிடம்
11. வினையாகிய சூறைக் காற்றால் அலைக் கழிக்கப்படும் மரக்கலம்
12. வேறுபாடுகளையே எப்பொழுதும் விளைவிக்கும் மாமையின் அடையாளம்
13. இறப்பு என்னும் பறவை குடி கொண்டிருக்கும் ஒரு கூடு
14. சோற்றாலே அடைக்கப்பட்ட ஒரு துருத்தி (தோற்பை)
15. காற்றால் ஆடும் காற்றாடி
16. காற்றில் தூற்றப்படும் பதர்
17. ஆன்மாக்களின் விதிப் பயனுக் கேற்ப எமனால் வெட்டி வீழ்த்தப்படும் ஒரு மரக்கட்டை
18. நான் முகனாகிய தையற் காரனால் தைக்கப்படும் சட்டை
19. கழுகு காகம் போன்றவைகளுக்காக இடப் பெறக் காத்திருக்கும் விருந்தின் கொள்கலம்
20. காம இச்சையால் எரிக்கப்படும் சருகு
21. புழு பூச்சுகள் கிண்டும் கிழங்கு
22. பிறப்பாகிய கொடிபடரும் கொழுக் கொம்பு
23. இளமைக் காலத்தில் திருமணக் கோலம் கொள்ளும் ஒரு நடைப்பிணம்
24. உண்மையில் வாழ்ந்து முடிந்து பிணமானபின் இந்நில உலகில் நிலைக்க ஒட்டாத மாயை
25. காற்றால் அலைப்புண்டு சிதறி உதிரும் இதழ்களையுடைய பூளைப்பூ

26. சூரியன் முன்நிலை பெறாத பனி
27. வானத்தில் தோன்றி மறையும் வானவில்
28. இடி இடித்தற்கு இடமாகிய வானமண்டலத்தில் நிலைக்காமல் ஓடும் மேகம்
29. நீரில் நிலைக்காத நீர்க்குமிழி
30. நீர் மேல் எழுத்து
31. நிலைக்காததான கனவு

ஆக இங்ஙனமாக மனித உடலானது நிலையுதல் இல்லாத ஒரு மாயையின் விளையாட்டை ஆடும் களமாக உள்ளதைப் பட்டினத்தார் கூறியதால் நிலையாமை ஒன்றே நிலைத்தது என்பதால் தில்லைக் கூத்தனே! உன் திருநடனம் காட்டி ஆட்கொள் என்றும் அதுவே உந்தனக்கு அழகாம் என்றும் பட்டினத்தார் கூறுவது எவரும் இதுபோல் பட்டியல் இடம்பெறாத உண்மையாகும்.

மேற்படியாகக் கூறிய பாடலின் இறுதியில் பட்டினத்தார், அமையும் அமையும் பிரானே அமையும் என மும்முறை அமையும் என்றது கூறப்பட்ட உவமைகள் யாவும் (31) இவ்வுடற்குப் பொருந்தும் என்பதால் உமாதேவியார் துதிக்க ஆடும் ஆனந்தத் தாண்டவத்தால் அருள் வழங்குதலே அடியேனுக்கு நிலைக்கும் எனப் பட்டினத்தார் வேண்டினார்.

பேதித்து நம்மை வளர்த் தெடுத்த பெய்வளை – என உமா தேவியை மணிவாசகர் சத்தியைத் தனியே வியந்தவாறு ஈண்டுப் பட்டினத்தார் இமயவல்லி வாழி என்றேத்த ஆனந்தத் தாண்டவம் காட்டி என்றார். இங்ஙனம் கூறிய இருபெரும் அருளாளர்களின் கருத்தில் ஒருநுட்பம் உள்ளது.

சிவன் அர்த்தநாரி வடிவினன் என்பது பொதுக் கருத்து. இது சித்தாந்தத்தின் படி, சர்வவியாப்த நிலையாகும். ஆனால் அவன் ஆன் மாக்களுக்கு அருள்தர வரும்போது சக்தியும் சிவமுமான தனித்தனி வடிவில் வருவான் என்பதும் தடத்தநிலை சொரூபமான சித்தாந்தமாகும். அருளே இவனது சக்தி எனச் சிவத்தையும் சக்தியையும் பிரித்துணர்த்தும் சிவஞான சித்தியார் நூலின் கருத்திற்கியையவும் ஈண்டுப் பட்டினத்தார் ஆடல்வல்லானை அர்த்த

நாரியாக ஒன்றாயிருந்து ஆடுவதாகக் காட்டாமல் தனித்தனியாகக் காட்டுவது தனித்த தொரு தத்துவம் எனலாம்.

இமய வல்லி எனப் பட்டினத்தார் பொதுமையாகச் சக்தியைக் கூறினாலும் திருமூலர் தில்லை என்ற நினைப்பை உண்டாக்க ஆனந்தத் தாண்டவத்தின் சக்தியாக உள்ளவள் சிவகாமி என்கிறார்.

*ஒளியாம் பரமும் உளதாம் பரமும்*
*அளியார் சிவகாமி ஆகும் சமயக்*
*களியார் பரமும் கருதுறை அந்தத்*
*தெளிவாம் சிவானந்த நட்டத்தின் சத்தியே! (2726)*

சீவன் களை (ஆன்மாக்களை)ச் சிவமாக்கி ஆள்வது சிவனே என்றாலும் அச்சிவத்திற்குச் சீவனாக (உயிர்ப்பாக) இருப்பவள் சக்தியே என்பதால் சிவனை விரும்புபவள் (காமிப்பவள்) சிவகாமி எனப்பட்டாள் சக்தி. இந்தக் கருத்துச் சுழற்சியில் ஓர் உண்மையை உணர வேண்டும். அந்த உண்மை - தான் ஆதார ஆதேயம் எனத் திருமந்திரம் கூறும் சொல்லாடல்களின் பொருள் நுட்பம் ஆகும்.

எல்லாம் நிலைப்பதற்கு மண் உலகம் ஆதாரம் பொருள், அதன் மீதுள்ள எல்லாம் ஆதேயப் பொருள்கள். ஆதேயம் தானாக அமைவதில்லை அதாவது ஆதாரம் இன்றி ஆதேயம் இல்லை.

நாற்காலியின் மீது ஒருவர் அமர்ந்திருப்பது ஆதார ஆதேய நிலைக்கான எடுத்துக்காட்டாகும்.

தரையில் போடப்பட்ட நாற்காலியைத் தரை தாங்குவதானது ஆதாரம். அதன் மீது ஒருவர் அமர்ந்தாரானாலும் தரையானது தாங்கும் நாற்காலியில் அமர்ந்தார் என்பதாக் கருதப்படுதல் இல்லை; தரையில் அமர்ந்ததாகவே உணரும் அனுமானந்தான் ஆதேயம்.

இவ்வாறே இமய வல்லி வழி இறைவன் அருள்கிறானேயன்றி இறைவனாகவே அருளவில்லை என்பது குறிப்பாகும். இதைத்தான் சித்தாந்தத்தில் சத்திநிபாதம் இன்றி ஆன்மா ஈடேறாது என்பர்.

இச்சித்தாந்த நுட்பத்தைத் தான் உலகியலில் புரிந்தோ புரியாமலோ மனைவி போடும் தாளத்திற்குக் கணவன் ஆடுகிறான் என்பர். ஆக சக்தியின் ஆதாரத்தால் சிவம் ஆதேயமாக ஆன்மாக்களுக்கு

அருள்பாலித்து ஆட்கொள்கிறான் என்பதோடு அப்படி அவன் அருளுவது தான் அழகு என்றது அதிஅற்புதமானதத்துவக் குறிப்பாம் என்க.

முன்பாடலில் உடலின் இழிநிலைப் பண்புகளை யெல்லாம் பட்டியலிட்ட பட்டினத்தார் அடுத்த பாடலிலும் விட்ட குறை தொட்ட குறையாக அதே உடம்பின் இழிநிலையை அடுக்கிக் கூறி அடைக்கலம் வேண்டுகிறார்.

எது விழுப்பொருள் என அறியாத மனம், அவ்வப் போது வழுக்கி வழுக்கி விழும் கனவு வாழ்வில் ஆணவம் தான் தலைதூக்கி ஆட்சி செய்ய அதன் வழிப்புழுவென நெளியும் சிந்தையோடு பல்வேறு பழகிய பாழான வஞ்சனை, பாவம், பொறாமை, மறதி, பொய், கோபம் போன்ற முரண்பட்ட குணங்களுடன் பகை பயன் போன்றவைகளும் குடிகொண்டுள்ள கொள் கலமாக விளங்குவது மானுடயாக்கை. மேலும் அதில் பஞ்சேந்திரிய சேர்க்கையும், வினைகளும் சேர்க்கப்பட்டுள்ளன. அத்தகைய மட்பாண்டம் போன்ற தான உடம்பை - மாமிசத்தால் ஆக்கப்பட்ட பிண்டம் என்றும் கொலை பாவங்கள் எல்லாம் செய்வதற்குத் தீமைகள் குவித்து வைக்கப்பட்ட குப்பைக்கிடங்கு என்றும் பொய்ப்பொருள்களைக் கட்டிக் காக்கும் கோணிப் பை என்றும் தீய பண்புகளான பறவைகள் வந்து தங்கிப் போகும் கூடு என்றும் காசுபணமாகிய காற்றால் அலைமோதும் காற்றாடி என்றும் நல்வினை தீவினைகளின் சுழற்சிக்குரிய சக்கர உருளை என்றும் பிறவிப் பெருங்கடலில் தத்தளிக்கும் கரையைச் சேர முடியாத கப்பல் என்றும் எமன் வந்து அழைக்க நடுங்கும் தேகம் என்றும் பல்வேறாகக் கூறப்படும் இவ்வுடல், மாயா முன் இவ்வுடலுள் உள்ள ஆன்மாவை இறைவா அடைக்கலமாக ஏற்றுக்கொள் என்கிறார் பட்டினத்தார்.

சைவத்தில் கூறும் அடைக்கலந்தான் வைணவத்தில் சரணாகதி எனக் கூறுவர். உடையாய் என்னைக் கண்டு கொள்ளே என மணி வாசகர் வேண்டுவது போல் ஈண்டு பட்டினத்தார், அடைக்கலம் அடைக்கலம் என்று ஐந்து முறை கூறி அடைக்கலம் வேண்டுகிறார். ஐம்புல அடக்கமே அடக்கம்; அவற்றாலே அடைக்கலம் பெற முடியும் என்ற குறிப்பை உணர்த்தவே பட்டினத்தார் சிவனே நின் அடைக்கலம் என்றார். அங்ஙனம் கூறுவதிலும் செய்யபொன்னம்பலச் செல்வ! நின் அடைக்கலம் என இறுதியாகச் சுட்டுவதில் ஒரு குறிப்பை

உணர்த்துவதாகவே பட்டினத்தார் அடைக்கலம் வேண்டினார் எனலாம்.

குறிப்பிட்ட செல்வ! என்ற சொல் தில்லையம்பல வாணனைச் சுட்டுவதாகும். இந்தச் செல்வ என்ற சொல்லை வைத்தே திருஞான சம்பந்தர் தில்லையில் பாடுகையில் ஏழுமுறை பயன்படுத்துகிறார். அங்ஙனம் கூறக் காரணம் யாதெனில் பிறவி எடுக்கும் ஏழேழ் சென்மத்திற்கும் நீயே ஆன்மாவிற்கான செல்வமும் செல்வனும் ஆவாய் என்பதன் குறிப்பாம் என்க! அந்த வகையில் ஈண்டுப் பட்டினத்தார் வேண்டிய ஐந்து முறை அடைக்கலம் என்பது ஐம்புலத்தை அடக்கினால் ஆன்மா இறைவனிடம் அடைக்கலம் பெறும் என்பது கருத்தாகும் எனலாம்.

வேண்டும் அடைக்கலமும் அதிசயமாகவே உள்ளது. பாற்கடலைக் கடைந்த போது முதலில் நஞ்சு வந்தது. பின்னர் அமுதம் வந்தது. ஆனால் ஈண்டுப் பட்டினத்தார் வெண்ணெய் வந்ததாகக் கூறுவது ஓர் அதிசய மன்றோ!

பாற்கடல் கடையப் படுங்கடு வெண்ணெயைத் திருமிடற்றடக்கிய சிவனே அடைக்கலம் பாற்கடல் என்பதற்கேற்ப வெண்ணெய் என்றது பொருத்தமேயானாலும் கடு வெண்ணெய் என்றதால் நஞ்சை மட்டும் உணர்த்தினார். கடுநஞ்சு தோன்றிய பிறகே தேவாசுரர்கள் இறைவனிடம் அடைக்கலம் அடைந்தனர். அதுபோல விஷமான வாழ்வில் அது நீங்க அருள் தந்து அடைக்கலம் தா என்கிறார் பட்டினத்தார். அதாவது அமுதம் வந்த போது அடைக்கலம் வேண்டாதது போல ஈண்டுத் துன்பத்திற்கே இறைவன் காப்பாக வேண்டும் என்ற கருத்தில் கூறப்பட்டது. அந்த அடிப்படையில் தான் எமனானவன் மார்க்கண்டேயனுக்கு உயிரைப்பறித்த நேரத்தில் சிவன் எமனை எத்தித்தள்ளி அடைக்கலம் தந்ததைப் பட்டினத்தார் அடுத்துச் சுட்டினார்.

இவ்வாறாகப் பாழான உடல் இன்பமே இன்பம் எனக் கருதி வாழாமல் உயிர்உய்தி பெற, பக்தி செய்து அடைக்கலம் வேண்டினால் இறைவன் சக்தியுடன் ஆனந்தம் அருள்வான் என்கிறார் பட்டினத்தார். இனிக் கச்சியம்பதியின் அகவலைத் தகவலாக அறிவோமாக!

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

வாசியில் ஏறியடி - அகப்பேய்
வான்பொருள் தேடாயே
வாசியில் ஏறினாலும் - அகப்பேய்
வாராது சொன்னேனே 61

விளக்கம் - வாசியாகிய மூச்சுக்காற்றை அடக்கியபடி உயர்ந்த பொருளாகிய இறையைத் தேடமாட்டாயோ? அப்படி நீ மனமே மூச்சை அடக்கினாலும் உயர்ந்த பொருள் வரமாட்டாது.

தூராதி தூரமடி - அகப்பேய்
தூரமும் இல்லையடி
பாராமல் பாடியோ - அகப்பேய்
பாழ்வினை தீரவென்றால் 62

விளக்கம் - இறைநிலை தொலைவில் உள்ளது. உயர்வார்க்கு அது தொலைவில் இல்லை. நீ முற்பிறவியல் செய்த தீவினை தீர வேண்டுமென்றால் தொலைவைப் பாராதே.

உண்டாக்கிக் கொண்(டு)து அல்ல - அகப்பேய்
உள்ளது சொன்னேனே
கண்டார்கள் சொல்லாரோ? அகப்பேய்
கற்பனை அற்றதடி 63

விளக்கம் - தீவினை நீ உண்டாக்கிக் கொண்டதல்ல. தானே வருவது. உள்ளது சொன்னேன். கண்டவர்கள் அதுபற்றிச் சொல்ல மாட்டார்களோ? அது கற்பனை அன்று.

நாலு மறைகாணா - அகப்பேய்
நாதனை யார்கண்டார்கள்?
நாலு மறைமுடிவில் - அகப்பேய்
நற்குரு பாதமடி 64

விளக்கம் - நான்கு வேதங்களும் காணாத இறைவனைக் கண்டவர்கள் யாவர்? நான்கு வேதங்களின் முடிவு நற்குருவாகிய இறைவனின் பாதமே.

மூலம் இல்லையடி - அகப்பேய்
முப்பொருள் இல்லையடி

**மூலம் உண்டானால் - அகப்பேய்**

**முத்தியும் உண்டாமே 65**

விளக்கம் - அதற்கு மூலம் இல்லை. மும்மூர்த்திகளும் இல்லை. மூலம் உண்டு என்றால் வீடுபேறு உண்டு.

**இந்திர சாலமடி - அகப்பேய்**

**எண்பத்(து) ஒருபதமும்**

**மந்திரம் அப்படியே - அகப்பேய்**

**வாயைத் திறவாதே 66**

விளக்கம் - எண்பத்தோர் பதங்களும் இந்திரசாலம். சகல மந்திரங்களும் அப்படியே. அது பற்றி வாயைத் திறக்காதே. அதாவது சொல்லாதே

**பாழாக வேணும் என்றால் - அகப்பேய்**

**பார்த்ததை நம்பாதே**

**கேளாமல் சொன்னேனே - அகப்பேய்**

**கேள்வியும் இல்லையடி 67**

விளக்கம் - தானாகி நினைத்தால் பார்த்தவற்றை நம்பாதே. யாரையும் கேட்காமலே சொன்னேன். இது பற்றிய கேள்விகள் ஏதுமில்லை

**சாதி பேதம்இலை - அகப்பேய்**

**தானாகி நின்றவர்க்கே**

**ஓதி உணர்ந்தாலும் - அகப்பேய்**

**ஒன்றுந்தான் இல்லையடி 68**

விளக்கம் - தானாகி நின்றவர்க்குச் சாதி பேதங்கள் இல்லை. ஓதி உணர்ந்து பார்க்கையில் ஒன்றும் இல்லை என்பது புலப்படும்.

**சூழ வானமடி - அகப்பேய்**

**சுற்றி மரக்காவில்**

**வேழமும் உண்டகனி - அகப்பேய்**

**மீளாது கண்டாயே 69**

விளக்கம் - நந்தவனம் சுற்றிப் பார்த்தாலும் வானமே எங்கும் சூழ்ந்திருக்கும். யானை உண்ட விளாம்பழம் மீளக் கிடைக்காது.

**நானும் இல்லையடி - அகப்பேய்**

**நாதனும் இல்லையடி**

**தானும் இல்லையடி - அகப்பேய்**

**சற்குரு இல்லையடி 70**

விளக்கம் - நான் என்கின்ற அகங்காரம் இல்லை. இறைவனும் இல்லை. எல்லாம் தானே என்னும் அகங்காரம் இல்லை. அதனால் சற்குருவும் இல்லை.

**மந்திரம் இல்லையடி - அகப்பேய்**
**வாதனை இல்லையடி**
**தந்திரம் இல்லையடி - அகப்பேய்**
**சமயம் அழிந்ததடி 71**

விளக்கம் - மந்திரம் எதுவும் இல்லை. அதனால் உண்டான வாதனை இல்லை. தந்திரம் எதுவும் இல்லை. சமயம் அழிந்துபட்டது.

**பூசை பசாசமடி - அகப்பேய்**
**போதமே கோட்டமடி**
**ஈசன் மாயையடி - அகப்பேய்**
**எல்லாமும் இப்படியே 72**

விளக்கம் - பூசை என்பது பேய் போன்றது. பிடித்தால் விடாது அறிவே ஆலயம். ஈசன் என்பது மாயை. அனைத்தும் இப்படியே.

**சொல்லல் ஆகாதே - அகப்பேய்**
**சொன்னாலும் தோடமடி**
**இல்லை இல்லையடி - அகப்பேய்**
**ஏகாந்தம் கண்டாயே 73**

விளக்கம் - அதுபற்றிச் சொல்லுதல் ஆகாது. அப்படிச் சொன்னாலும் அது குற்றமாகும். இல்லை என்பதே இல்லை. அது தனிமை என்பது கண்டாயே.

**தத்துவத் தெய்வமடி - அகப்பேய்**
**சதாசிவம் ஆனதடி**
**மற்றுள்ள தெய்வம் எல்லாம் - அகப்பேய்**
**மாயை வடிவாமே 74**

விளக்கம் - தத்துவமே தெய்வம். அதுவே சதாசிவம். மற்றுள்ள தெய்வங்கள் மாய வடிவங்களே.

**வார்த்தை அல்லவடி - அகப்பேய்**
**வாசாம கோசரத்தை**
**ஏற்ற தல்லவடி - அகப்பேய்**
**என்னுடன் வந்ததல்ல 75**

விளக்கம் - இது வார்த்தை அல்ல வாக்குக்கு எட்டாதது. ஏற்றதல்ல. அது என்னுடன் வந்தது அல்ல.

**சாத்திரம் இல்லையடி - அகப்பேய்**
**சலனம் கடந்ததடி**
**பார்த்திடல் ஆகாதே - அகப்பேய்**
**பாவனைக்கு எட்டாதே 76**

விளக்கம் - அது சாத்திரம் இல்லை. சலனத்தைக் கடந்தது. பார்க்க இயலாதது. பார்க்க இயலாது. தியானத்திற்கு எட்டாதது.

**என்ன படித்தால்என் - அகப்பேய்**
**எதுதான் செய்தால்என்?**
**சொன்ன விதங்களெல்லாம் - அகப்பேய்**
**சுட்டது கண்டாயே 77**

பேயறிவு விளக்கம் - என்னதான் படித்தால் என்ன? எச்செயலைச் செய்தால் என்ன? சொன்ன விதங்கள் அனைத்தும் சுட்டிச் சொன்னவை என்று கண்டாய் அல்லவா?

**தன்னை அறியவேணும் - அகப்பேய்**
**சாராமல் சாரவேணும்**
**பின்னை அறிவ தெல்லாம் - அகப்பேய்**
**பேய் அறிவு ஆகுமடி 78**

விளக்கம் - தன்ன முதலில் அறிந்து கொள்ள வேண்டும். எதையும் சார்ந்திருக்கலாகாது. பின்னால் அறிவதெல்லாம் பேய்க்குள்ள அறிவே

**பிச்சை எடுத்தாலும் - அகப்பேய்**
**பிறவி தொலையாதே**
**இச்சை அற்றவிடம் - அகப்பேய்**
**எம்இறை கண்டாய் 79**

விளக்கம் - பிச்சை எடுத்தாலும் பிறவி தொலையாது. ஆசையற்ற இடமே எம் இறைவன் இருக்கும் இடம்

**கோலமும் ஆகாதே - அகப்பேய்**
**குதர்க்கம் ஆகாதே**
**சாலமும் ஆகாதே - அகப்பேய்**
**சஞ்சலம் ஆகாதே 80**

விளக்கம் - வேடங்கள் ஆகாது. வீண் விளக்கங்கள் ஆகாது. எல்லாம் தெரியும் என்ற இறுமாப்புக் கூடாது. சஞ்சலமும் ஆகாது.

**ஒப்பனை அல்லவடி - அகப்பேய்**
**உன்ஆணை சொன்னேனே**
**அப்புடன் உப்பென்ன - அகப்பேய்**
**ஆராய்ந்து இருப்பாயே 81**

விளக்கம் - அலங்காரம் அல்ல. உன்மேல் ஆணை இதைச் சொன்னேன். நீரென்ன? உப்பென்ன? இதை ஆராய்ந்து பார்.

**மோட்சம் வேண்டார்கள் - அகப்பேய்**
**முத்தியும் வேண்டார்கள்**
**தீட்சை வேண்டார்கள் - அகப்பேய்**
**சின்மயம் ஆனவர்கள் 82**

விளக்கம் - வீடுபேற்றை விரும்பாதவர் முத்தியை விரும்பாதார். அறிவு மயமானவர்கள் பிறருடைய உபதேசத்தை விரும்பார்.

**பாலன் பிசாசமடி - அகப்பேய்**
**பார்த்தக்கால் பித்தனடி**
**காலம் மூன்றும் அல்ல - அகப்பேய்**
**காரியம் அல்லவடி 83**

விளக்கம் - இளமை பேய்த்தன்மை கொண்டது. பார்த்தால் பைத்தியம் போல் தோன்றும். நிகழ்வு எதிர் இறந்தகாலம் எனக் காலம் மூன்று அல்ல. அது காரியமும் அல்ல.

**கண்டதும் இல்லையடி - அகப்பேய்**
**கண்டவர் உண்டானால்**
**உண்டது வேண்டடியோ - அகப்பேய்**
**உன்ஆணை சொன்னேனே 84**

விளக்கம் - இறையைக் கண்டதும் இல்லை. அப்படிக் கண்டவர் உண்டாயின் உன்மேல் ஆணை. அது வேண்டும்.

**அஞ்சையும் உண்ணாதே - அகப்பேய்**
**ஆசையுடன் வேண்டாதே**
**நெஞ்சையும் விட்டுவிடு - அகப்பேய்**
**நிட்டையும் சேராதே 85**

விளக்கம் - ஐம்பலன்களை உட்கொள்ளாதே. ஆசையுடன் அதனை வேண்டும் என்று விரும்பாதே. நெஞ்சில் தோன்றும் அதுபற்றிய எண்ணங்களை விரும்பாதே. நெஞ்சில் தோன்றும் அதுபற்றிய எண்ணங்களை விரும்பாதே. நெஞ்சில் தோன்றும் அவ்வெண்ணங்களை விட்டுவிடு. நிட்டையில் இருக்காதே.

**நாதாந்த உண்மையிலே - அகப்பேய்**
**நாடாதே சொன்னேனே**
**மீதான சூதானம் - அகப்பேய்**
**மெய்என்று நம்பாதே 86**

விளக்கம் - உண்மையிலே ஞானநெறிகளிலே ஒன்றையும் நாடாதே. மெய்யே பாதுகாப்பானது என்று நம்பாதே.

**ஒன்றோடு ஒன்றுகூடில் - அகப்பேய்**
**ஒன்றும் கெடும்காணே**
**நின்ற பரசிவமும் - அகப்பேய்**
**நில்லாது கண்டாயே 87**

விளக்கம் - ஒன்றுடன் ஒன்று சேர்ந்தால் அந்த ஒன்றும் கெட்டுவிடும். நிலையாக நிற்கின்ற மேலான சிவமும் நில்லாது போவதைக் கண்டாயே.

**தோன்றும் வினைகள் எல்லாம் - அகப்பேய்**
**சூனியம் கண்டாயே**
**தோன்றாமல் தோன்றிவிடும் - அகப்பேய்**
**சுத்த வெளிதனிலே 88**

விளக்கம் - தோன்றிய வினைகள் அனைத்தும் ஒன்றுமில்லை என்பதைக் கண்டாய் அல்லவா? தூய்மையான வெளியில் தோன்றாமல் தோன்றி விடும்.

**பொய்என்று சொல்லாதே - அகப்பேய்**
**போக்குவரத்து தானே**
**மெய்என்று சொன்னக்கால் - அகப்பேய்**
**வீடு பெறலாமே 89**

விளக்கம் - அதனைப் பொய் என்று நீ சொல்லாதே. உண்மை என்று சொன்னால் நீ விடு பெறலாம்.

**வேதம் ஓதாதே - அகப்பேய்**
**மெய்கண்டோம் என்னாதே**
**பாதம் நம்பாதே - அகப்பேய்**
**பாவித்துப் பாராதே 90**

விளக்கம் - வேதத்தை ஓதாதே. அதனால் உண்மையை அறிந்தோம் என்று எண்ணாதே. பொய்யை நம்பாதே. அதை அநுபவித்துப் பாராதே. ஆக அனுபவமே உண்மை என்பதை உணர வேண்டும். வேதங்கள் உரைப்பன அத்தனையும் மெய்யாகாது என்று உணர்ந்தால் வீடு பெறலாம்.

*(தொடரும்...)*

# திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### பொருட்பால் – அரசியல்
### இறை மாட்சி
### அரசனது மாட்சிமை

**1. படைகுடி கூழ்அமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு.**

படைகுடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆறும் – படை, குடிமக்கள் நிறைந்த நாடு, நாட்டு மக்கள் வாழ்வதற்கான உணவுப்பொருள், நல்ல அமைச்சர், நல்ல நட்பு, பாதுகாப்பு நிறைந்த அரண் என்னும் ஆறும்; உடையான் அரசருள் ஏறு – கொண்டவன் அரசர்களுக்குள் ஏறு போன்றவன்.

படை, குடிமக்கள் நிறைந்தநாடு, அவர்கள் வாழ்வதற்கான உணவு முதலான பொருள் நல்ல அமைச்சர், நல்ல நட்பு, பாதுகாப்பு நிறைந்த அரண் என்னும் ஆறும் கொண்டவன் அரசர்களுக்குள் சிறந்த அரசன் ஆவான்.

ஆறும் – முற்றும்மை; ஏறு – உவமை ஆகுபெயர்

**2. அஞ்சாமை ஈகை அறிவுஊக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு.**

அஞ்சாமை – பகைகண்டு அச்சம் கொள்ளாமை; ஈகை – கொடைத் தன்மையும்; அறிவு – எதனையும் ஆராய்ந்து தெளியும் அறிவு; ஊக்கம் – வினை நிறைவேற்றுதலில் கொள்ளும் மன எழுச்சி; இந்நான்கும் – இந்த நான்கு பண்புகளும்; எஞ்சாமை – குறைவு படாமை; வேந்தற்கு இயல்பு – வேந்தனுக்கு இயல்பாக வேண்டும்.

பகை கண்டு அச்சம் கொள்ளாமை, கொடைத் தன்மை, எதனையும் ஆராய்ந்து தெளியும் அறிவு, வினை நிறைவேற்றுதலில் கொள்ளும் மன எழுச்சி என்னும் இந்த நான்கு பண்புகளும் குறைவுபடாமல் வேந்தனுக்கு இயல்பாக வேண்டும்.

அஞ்சாமை, எஞ்சாமை – தொழிற்பெயர்கள்; நான்கும் – முற்றும்மை; வேந்தற்கு – கு நான்காம் வேற்றுமை உருபு.

**3. தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலன்ஆள்ப வர்க்கு.**

தூங்காமை - செயலாற்றலில் சோர்வின்மையும்; கல்வி - செயலாற்றலுக்கு ஏற்ற கல்வியும்; துணிவுடைமை - அதனைச் செய்வதற்குரிய துணிவும்; இம்மூன்றும்; - இந்த மூன்று குணங்களும்; நீங்கா - நீங்கமாட்டா; நிலன் ஆள்பவர்க்கு - நாட்டை ஆளும் அரசர்க்கு.

நாட்டை ஆளும் அரசர்க்கு ஒரு செயலைச் செய்வதில் சோர்வின்மையும் செயலாற்றலுக்கு ஏற்ற கல்வியும், துணிவும் என்ற மூன்றும் நீங்காமல் இருக்க வேண்டிய குணங்களாகும்.

நீங்கா - எதிர்மறை வினைமுற்று.

**4. அறன் இழுக்காது அல்லவை நீக்கி மறன்இழுக்கா**
**மானம் உடையது அரசு.**

அறன் இழுக்காது - அறத்திலிருந்து வழுவாமல்; அல்லவை நீக்கி - அறனில்லாதவற்றை விலக்கி; மறன் இழுக்கா - வீரத்திலிருந்து வழுவாத; மானம் உடையது அரசு - தாழ்வு இன்மையை உடையவன் அரசன் ஆவான்.

அறத்திலிருந்து வழுவாமல், அறனில்லாதவற்றை நீக்கி, வீரத்திலிருந்து வழுவாத தாழ்வு இன்மையை உடையவனே அரசன் ஆவான்.

இழுக்கா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

**5. இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த**
**வகுத்தலும் வல்லது அரசு.**

இயற்றலும் - அரசுக்குப் பொருள்வரும் வழியை இயற்றுதலும்; ஈட்டலும் - அதன்வழி வந்த பொருள்களைத் தொகுத்தலும், காத்தலும் - அந்தப் பொருள்களைப் பிறர் கொண்டுவிடாமல் காத்துவைத்தலும்; காத்த - அவ்வாறு காத்தவற்றை; வகுத்தலும் - ஒவ்வொரு துறைக்காகவும் வகுத்தலும்; வல்லது அரசு - வல்லவனே அரசனாவான்.

அரசுக்குப் பொருள்வரும் வழியை இயற்றுதலும் வந்த பொருள்களைத் தொகுத்தலும் தொகுத்தவற்றைப் பிறர் கொண்டுவிடாமல் காத்தலும் காத்தவற்றைத் துறைகள் தோறும் பிரித்துக் கொடுத்தலும் ஆகிய செயல்களில் வல்லவனே அரசன் ஆவான்.

இயற்றலும் ஈட்டலும் காத்தலும் - எண்ணும்மை.

**6. காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்**
**மீக்கூறும் மன்னன் நிலம்.**

காட்சிக்கு எளியன் - குடிமக்கள் சென்று பார்ப்பதற்கு; எளிமையானவன்; கடுஞ்சொல்லன் அல்லனேல் - அவர்களிடத்தில் கடும் சொல் கூறாதவனாகவும் இருந்தால்; மீக்கூறும் மன்னன் நிலம் - மன்னன் ஆளும் நாட்டை உலகத்தவர் உயர்த்திக் கூறுவர்.

குடிமக்கள் சென்று பார்ப்பதற்கு எளியனாகவும் அவர்களிடத்தில் கடும் சொல் கூறாதவனாகவும் இருந்தால் அந்த மன்னன் ஆளும் நாட்டை உலகத்தவர் உயர்த்திக் கூறுவர்.

எளியன் - குறிப்பு வினை முற்று;

அல்லன் - எதிர்மறை வினைமுற்று

**7. இன்சொல்லால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்**
**தான்கண் டனைத்துஇவ் வுலகு.**

இன்சொலால் - இனிய சொற்களுடன்; ஈத்தளிக்க வல்லாற்கு - பொருள் ஈந்து காக்கக் கூடிய வலிமை கொண்ட மன்னனுக்கு; தன் சொலால் - தன் சொற்களால்; தான் கண்டனைத்து இவ்வுலகு - தான் கருதிய அளவில் இவ்வுலகம் அமையும்.

இனிய சொற்களுடன் பொருள்களை ஈந்து காக்கக் கூடிய வலிமை கொண்ட மன்னனுக்கு அவன் சொற்களால் அவன் கருதிய அளவில் இவ்வுலகம் அமையும்.

இன்சொலால் - பண்புத் தொகை

**8. முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறைஎன்று வைக்கப் படும்.**

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் - குடிமக்களுக்குச் செய்ய வேண்டிய முறைமைகளைச் செய்து அவர்களைக் காப்பாற்றும் மன்னன், மக்கட்கு - அந்தக் குடிமக்களுக்கு; இறை என்று வைக்கப்படும் - கடவுள் என்று வைக்கப்படுவான்.

குடிமக்களுக்குச் செய்ய வேண்டிய முறைமைகளைச் செய்து அவர்களைக் காப்பாற்றும் மன்னவன் அந்தக் குடிமக்களுக்குக் கடவுள் என்று வைக்கப்படுவான்.

முறை செய்து - இரண்டாம் வேற்றுமைத் தொகை.

9. செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
   கவிகைக்கீழ்த் தங்கும் உலகு.

செவிகைப்பச் சொற்பொறுக்கும் - பிறர் சொல்லும் கடுஞ்சொற்கள் செவிகளுக்கு வெறுப்பானாலும் அச்சொற்களைப் பொறுத்துக் கொள்ளும்; பண்புடை வேந்தன் - பண்பினை உடைய வேந்தன்; கவிகைக்கீழ்த் தங்கும் உலகு - வெண்கொற்றக் குடையின் கீழ் இந்த உலகம் தங்கும்.

பிறர் சொல்லும் கடுஞ்சொற்கள் செவிகளுக்கு வெறுப்பானாலும் அச்சொற்களைப் பொறுத்துக் கொள்ளும் பண்புடைய வேந்தனின் வெண்கொற்றக் குடையின் கீழ் இந்த உலகம் தங்கும்.

பண்புடை - கடைக்குறை

10. கொடைஅளி செங்கோல் குடிஓம்பல் நான்கும்
   உடையானாம் வேந்தர்க்கு ஒளி.

கொடை - வேண்டுவார்க்குக் கொடுத்தல்; அளி - அன்பின் மொழியால் அருள் காட்டல்; செங்கோல் - முறை செய்தல்; குடிஓம்பல் - குடிமக்களைப் பாதுகாத்தல்; நான்கும் உடையான் - எனும் நான்கு செயலும் உடையவன்; ஆம் வேந்தர்க்கு ஒளி - வேந்தர்களுக் கெல்லாம் ஒளி ஆவான்.

வேண்டுவார்க்குக் கொடுத்தல், அன்பின் மொழியால் அருள் காட்டல்; முறைசெய்தல்; குடிமக்களைப் பாதுகாத்தல் எனும் நான்கு செயலும் உடையவன் வேந்தர்களுக் கெல்லாம் ஒளி ஆவான்.

கொடை, ஓம்பல் - தொழிற் பெயர்கள்.

*(தொடரும்...)*

---

24.11.2018 சனிக்கிழமை அன்று நடைபெற்ற இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் சிலப்பதிகாரத்தில் அரங்கேற்று காதை பற்றி டாக்டர். சரளா அவர்கள் சிறப்புரை ஆற்றினார்.

---

## விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**